உ

சிவமயம்.

# குண்டவிதி.

(படங்களுடன்)

இஃது

பஞ்சாக்ஷரபுரம்

உயர்திரு

**வாலையானந்த சுவாமிகளால்**

இயற்றப்பெற்று,

சென்னை திருவல்லிக்கேணி

**சோல்டன் கம்பெனியாரால்,**

தமது பதிப்பகத்தில்

பதிக்கப்பெற்றது.



1930

இதன் விலை] [ரூ. 1—4—0.

உ

சிவமயம்.

கணபதி துணை.

# முன்னுரை.

கடவுளை வழிபடுமிடங்களில் அக்கினி பிரதானமானது. அதிற் சிவபெருமானை விதிப்படிப் பூசித்து அவரை மகிழ்விக்கச் செய்யுங்கிரியையே யாகமாகும். சிவயாகத்தில் சிவாக்கினியைப் பூசிக்குமிடங்களே குண்டங்கள். அக்குண்டங்கள் விதிப்படி அமைக்கப்பெறுவிடின் காரிய நாசமுண்டாகும்.

சிவாகமங்கள் பலவாகவிருத்தலின் கிரியாபேதங்களும் பல திறமாகும். இதையே ஒரு முக்கிய காரணமாகக் கொண்டு சிலர் தாங்கள் செய்யுங்குறைகளுக்குச் சமாதானங்கூறுவது இக்காலத்தில் பெருவழக்காகவிருக்கிறது.

குண்டங்களின் விதியைப் பலருமறிந்திருந்தால் அவைகளை அமைக்குங் காலங்களில் நேரக்கூடிய குறைகளை நிவர்த்திக்க நேரும் என்ற நோக்கத்துடன் இக்குண்டவிதியைப் படங்களுடன் வெளியிட்டேன்.

இக்காலத்தில் சைவாசாரியர் பலராலும் போற்றப் பெறுகிற சித்தாந்த சாராவளி முதலிய கிரந்தங்களையும் விதிக்குப் பொருத்தமான சில யுத்திகளையுங்கொண்டு படங்களும் விதிகளும் அமைக்கப்பெற்றிருத்தலால், அவற்றுட் காணப்படுங்குறைகளை அறிஞர்கள் அறிவித்தால் மறுபதிப்பில் திருத்திப் பதிப்பிக்கப்படும்.

சித்தாந்தப்படம், சைவாநுட்டானவிதி, பிராசாதப்படம், சிவஞானபோதச் சுருக்கம் முதலியவைகளைப் போலவே இக்குண்டவிதியையும் அச்சிட்டு வெளியிட எல்லாவகையாலும் எனக்கு உதவிபுரிந்த திருவல்லிக்கேணி சோல்டன் கம்பெனியாரது பேருதவி என்னாலும் இதைக்கண்ணுறும் ஒவ்வொருவராலும் என்றும் மறக்கமுடியாது. அவர்களுக்கு நலங்களனைத்தையும் அருள்புரிய இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

பஞ்சாட்சரபுரம்,

**வாலையானந்தம்.**

சிவமயம்.

# குண்டவிதி.

யாகசாலா என்ற வடமொழிச் சொல்லில் உள்ள யகரம் யஞ்ஞத்தையும் ககரம் செல்லுதலையும் சகரம் சுகத்தையும் லகரம் லயத்தையும் குறிப்பதால் யாகசாலை என்ற சொல்லுக்கு ஞான யாகத்தால் லயத்தானத்தில் சுகத்தின் பொருட்டுச் செல்வது என்று பொருளாகும். ஆதலால் ஞானயாகம் செய்வதற்குரிய ஸ்தானம் யாகசாலையாகும்.

யாகசாலைக்காகக் குறிப்பிட்ட பூமியானது விதிப்படி சல்யோத்தாராதி செய்து தயாரிக்கப்பட வேண்டும். சல்யோத்தாரமாவது, பூமியை முழங்காலளவு பள்ளமெடுத்து ஓடு கல் முதலான சல்லியமில்லாமல் சோதித்துச் சமமாகச் செய்வது. அவ்வாறு செய்யப்பட்ட பூமியை மெழுகி அவ்விடத்தில் வாஸ்து பூசை செய்து யாகமண்டபம் செய்யவேண்டும்.

அத்தகைய யாகமண்டபத்தில் சிவாக்கினியைப் பால யௌவன விருத்த சொரூபமாகவும், அஷ்டமூர்த்தி வடிவமாகவும் பூசிப்பதற்கு உதவியாக உள்ளவை குண்டங்கள்.

அக்கினியானது வைதிகாக்கினி சிவாக்கினிஎன இருவகைப் படும். வைதிகாக்கினி தேவாத்மக பாவமில்லாது ஜாடராக்கினி ரூபமுடையதாகும். இது வைசுவாந ராக்கினி யெனவும் பெயர் பெறும். இது கர்மயாகத்துக்கே உரியது. இதற்குப் பஞ்சாவரணங்களில்லை. சிவாக்கினியானது தேவாத்மக பாவமுடையதாய்ச் சிவரூபமாகும். இது ஞானயாகத்துக்கே உரியது. இதற்குப் பஞ்சாவரணங்களுண்டு.

இனி பாலாக்கினியானது கர்ப்பாதானம் பும்ஸவனம் சீமந்தோந்நயனம், நாமகரணம் வரை சம்ஸ்காரமுடையது. யௌவனாக்கினியானது விவாகபரியந்த சம்ஸ்காரமுடையது. விருத்தாக்கினியானது சோடச சம்ஸ்காரங்களனைத்துமுடையது. இவற்றுள் பாலாக்கினி சமயதீக்கை பிராயச்சித்தம் நித்தியாக்கினி அபரக்கிரியைகளுக்கும், யௌவனாக்கினி உத்ஸவம் நிர்வாண தீட்சைகளுக்கும், விருத்தாக்கினி பிரதிட்டைக்கும் ஆகும்.

யாகசாலையில் கிழக்கில் நாற்கோண குண்டமும், அக்கினி திக்கில் அர்சிலைக் குண்டமும் (யோனிகுண்டம்), தெற்கில் அர்த்த சந்திர குண்டமும், நிருதியில் முக்கோண குண்டமும், வாயு திக்கில் அறுகோண குண்டமும், மேற்கில் விருத்தகுண்டமும், வடக்கில் பத்மகுண்டமும், ஈசானத்தில் எண்கோணகுண்டமும், ஈசானத்துக்கும் கிழக்குக்கும் மத்தியில் பிரதான குண்டமும் (விருத்த குண்டம்) போடவேண்டும்.

நாற்கோண குண்டம் பிருதிவிதத்துவமாகும், அரசிலைக் குண்டம் நியதிமாயாதத்துவமாகும். அது சிவனைக் குறிக்கும். அர்த்த சந்திரகுண்டம் அப்புதத்துவமாகும். முக்கோணகுண்டம் தேயு தத்துவமாகும். அறுகோணகுண்டம் வாயுதத்துவமாகும். விருத்த குண்டம் ஆகாயதத்துவமாகும். பத்மகுண்டம் கலாதத்துவமாகும். இது சூரியனைக் குறிக்கும். எண்கோணகுண்டம் காலதத்துவமாகும். இது சந்திரனைக் குறிக்கும். விருத்த குண்டமாகிய பிரதானகுண்டம் சிவதத்துவமாகும். இது சிவபிரானைக் குறிக்கும். இவ்வாறு யாகசாலை, 36 தத்துவ சொரூபமாவதையும் சிவபிரானது அஷ்ட மூர்த்த வடிவாதலையுமறிக.

இங்ஙனங்கூறிய நாற்கோணமாதிய குண்டங்களில் முறையே தத்வேசர்களாகிய மகாதேவர் பவர், சர்வர், ஈசானர், பசுபதி, உருத்திரர், உக்கிரர், பீமர்,மகாதேவர் எனுமிவர்களும், முறையே மூர்த்தீசர்களான பரசிவம் தற்புருஷர், இருதய மூர்த்தி, அகோரர், சிகாமூர்த்தி, கவசமூர்த்தி, சத்தி யோஜாதர் வாமதேவர், சிரசுமூர்த்தி, பரசிவம் எனுமிவர்களும் பூசிக்கப் பெறுவார்கள்.

நாற்கோணகுண்டத்தில் ஆகவனீயாக்கினியும், அர்த்த சந்திரகுண்டத்தில் தக்ஷிணக்கினியும், விருத்தகுண்டத்தில் காருகபத்தியாக்கினியும், அறுகோணகுண்டத்தில் பாலாக்கினியும், திரிகோணகுண்டத்தில் யௌவனக்கினியும், யோனிகுண்டத்தில் விருத்தாக்கினியும், பத்மகுண்டத்தில் கேவலாக்கினியும், எண்கோணகுண்டத்தில் சாமான்யாக்கினியும், பிரதான குண்டத்தில் சிவாக்கினியும் என ஒன்பது அக்கினிகள் ஒன்பது குண்டங்களிலும் ஸ்தாபித்துப் பூசிக்கப்பெறும்.

## குண்டங்களின் பொதுவிதி.

குண்டங்கள் யாவும் ஒரே சுற்றளவுள்ளனவாய்ச் சிரசு, இருதயம், நாபி, கண்டம், யோனி, மேல்மேகலை, நடுமேகலை, கீழ்மேகலை, பரிஸ்தரணம் எனும் ஒன்பது உறுப்புகளையுடையனவாக விருத்தல்வேண்டும்.

குண்டங்களின் அகலம் ஒரு முழமாகும்; அதாவது இருபத்து நான்கங்குலம். அவ்வளவே மேல்மேகலையுட்பட உள்ளாழமாகும்; அதாவது மேல்மேகலையுட்படமேகலை உயரம் அங்குலம் ஒன்பதும், அதன் கீழ் உள்ளாழம் அங்குலம் பதினைந்தும் ஆக அங்குலம் இருபத்து நான்கு இருக்கவேண்டும்.

ஒரு குண்டத்தின் சுற்றளவே குண்டங்களனைத்தினுக்கும் தனித்தனியிருக்கவேண்டும்.

சிரசு :—குண்டத்தில் சிரசு அக்கினியாகும்.

இருதயம் :—குண்டநடுவில் உள்ள கர்ணிகையோடு கூடிய பதுமம் இருதயமாகும்.

அந்தப்பதுமம் குண்டத்திற் பாதியளவாகின்ற பன்னிரண்டங்குலம் குறுக்களவும் மூன்றங்குல உயரமுமுள்ளதாய்த் தம்முட் சமமான அளவுள்ள எட்டிதழும் கர்ணிகையுமுள்ளதாயிருக்க வேண்டும். அவற்றுள் இதழ்களின் அளவு இரண்டு பங்கும் கர்ணிகையின் அளவு ஒரு பங்குமாகும். அதாவது பதுமத்தின் குறுக்களவு பன்னிரண்டங்குலத்தின் மத்தியிலிருப்பது கர்ணிகையானதால் கர்ணிகையின் குறுக்களவு நான்கு அங்குலமும், கர்ணிகையின் இரண்டுபக்கங்களிலும் உள்ள இதழ்களிரண்டிற்கும் தனித்தனி இதழ் நீளம் நான்கு அங்குலமுமாக எட்டங்குலமும் ஆகப் பன்னிரண்டங்குலமாகும். கர்ணிகை மத்தியில் ஓர் அங்குல உயரமும் கனமும் உள்ள பீஜங்கள் (வித்துகள்) ஒன்பதிருக்கவேண்டும்.

நாபி :—குண்டநடுவில் உள்ள பதுமத்திற்கு வெளியில் வட்ட வடிவமாய் மூன்றங்குல உயரத்தில் செய்யப்பெறுவது நாபியாகும்.

கண்டம் :—குண்டத்தின் உயரத்தில் நடுப்பாதியில் உட்புறமாகக் குண்டத்தைச்சுற்றி ஓர் அங்குல கனத்தில் திரணையாகச் செய்யப்படுவது கண்டமாகும்.

யோனி :—குண்டயோனியாவது மேல் மேகலையில் அரசிலை வடிவாய் கண்டபரியந்தம் கீழ்நோக்கியிருப்பது. அது மேல் மேகலை மத்தியில் எட்டங்குல அகலமுடையதாய் அதன் நுனி முனையானது கண்டத்தைத் தொடுவதாய் 12 அங்குல நீளம் இருத்தல் வேண்டும். கண்டத்தின்கீழ் இரண்டங்குலம் நீண்டிருக்கும்படியும் செய்யலாம்.

குண்டயோனியானது கிழக்கு, அக்கினிமூலை, தெற்குத் திக்குகளிலுள்ள குண்டங்களுக்கு வடக்கு முகமாகவும், மற்றவைக்குக் கிழக்கு முகமாகவும் இருக்கவேண்டும்.

மேகலை:—மேகலையாவது கண்டத்தின் வெளியில் குண்ட வடிவாய்ச் சூழ்ந்திருப்பது, ஒவ்வொரு குண்டத்துக்கும் மேகலைகள் மூன்றிருக்க வேண்டும். அவற்றுள் மேல் மேகலையானது நான்கங்குல அகலமும் நான்கங்குல உயரமுமாக விருக்க வேண்டும். நடுமேகலையானது மூன்றங்குல அகலமும் மூன்றங்குல உயரமுமாக இருக்கவேண்டும். கீழ்மேகலையானது இரண்டங்குல அகலமும் இரண்டங்குல உயரமுமாக இருக்கவேண்டும்.

பரிஸ்தரணம் :—பரிஸ்தரணமாவது குண்டத்தைச் சுற்றிப் போடப்பெறும் தருப்பைகளாகும். இவை பசுமையான முப்பது தருப்பைகளினாலே சடைபோற் பின்னப்பட்டதாய் அல்லது முறுக்கப்பட்டதாய் ஓரங்குல அளவில் வலமாகப்போடப்பெற்ற முடிச்சை உடையதாக இருக்கவேண்டும். பரிஸ்தரணம் **விஷ்டரம்** **என்றும் கூறப்பெறும்.**

குறிப்பு.—யோனிகுண்டத்துக்கு யோனியும், பதுமகுண்டத்துக்கு இதயபதுமமும் வேண்டுவதில்லை.

குண்டங்களில் சாங்க உபாங்க பிரத்தியங்கங்களாவன :—அக்கினி சாங்கமும், மேகலைகள் உபாங்கமும், பரிஸ்தரணம் பிரத்தியங்கமுமாகும்.

இனி குண்டங்களில் பஞ்சாவரணங்களாவன :—முதலாவரணம் அக்கினி, இரண்டாமாவரணம் மேன்மேகலை, மூன்றுமாவரணம் நடுமேகலை, நான்காமாவரணம் கீழ்மேகலை, ஐந்தாமாவரணம் பரிஸ்தரணமாகும்.

## குண்டங்கள் அமைக்கும் முறை.

குண்டங்களுக்கெல்லாம் நாற்கோணமே உற்பத்தியிடமாதலால் நாற்கோணம் அமைக்கும் முறையை இந்தப்படம் காட்டுகிறது. இதிற்கண்ட அடையாள எழுத்துக்களில்லாமலே வேறு அடையாளங்களையிடலாம். இவ்வாறே மற்ற வைக்குமாகும்.




படம் I

நாற்கோணஞ் செய்யும் விதமாவது :—

பூமியை மட்டமாகச் செய்துகொண்டு மேற்கிலிருந்து கிழக்கு முகமாக இருபத்து நான்கு அங்குல அளவில் ஒருநூல் மாவினாலே நனைத்து அடித்து அதன் இருமுனைகளிலும் A. B. என்று குறியிடவும். இந்த நூலுக்குப் பிராசிசூத்திரம் எனப்பெயர்.

இந்த சூத்திரத்தை நான்காகப்பங்கிடப் பங்கு ஒன்றுக்கு ஆறங்குலமாகும். அந்த ஆறங்குல அளவில் A. யிலிருந்து முறையே D.G.C. என்று குறியிடவும். A.B. யின் முக்கால் அளவாகிய 18 அங்குலத்தைக் குறிக்கும் A. C. அளவில், A யை மத்தியாக வைத்து சுற்றுக்கருவியால் G யின் வடக்கிலும் தெற்கிலும் சுற்றி அடையாளக் கோடிடவும். B யை மத்தியாக வைத்து B. D. அளவில் முன் போல் G யின் வடக்கிலும் தெற்கிலும் சுற்றிஅடையாளமிடவும்.

அடையாளக் கோடுகள் புள்ளிக் கோடுகளாகப் படங்களிற் காட்டப்பட்டிருக்கின்றன.

முன் அமைத்த அடையாளக் கோடுகள் இரண்டுஞ் சேருமிடங்களில் வடக்கில E என்றும், தெற்கில் F என்றும் குறியிட்டு E யிலிருந்து F வரைக்கும் ஒரு நூல் அடிக்கவும். இந்த E. F. நூல் சோமசூத்திரம் எனப்பெயர் பெறும்.

சோமசூத்திரத்தில் G யிலிருந்து வடக்கில் 12 அங்குலத்தில் H என்றும், தெற்கில் 12 அங்குலத்தில் I என்றும் குறியிடவும்.

பிறகு A. G. அளவில் A, H, B, F, என்ற இடங்களை மத்தியாக வைத்து இருபக்கங்களிலும் சுற்றுக் கருவியாற்சுற்றி, அடையாளங்களிட்டு நாலு சந்திப்பு இடங்களிலும் J, K, L, M, என்று குறியிட்டு இவைகளை மூலைகளாகக் கொண்டு சமசதுரமாகிய நாற்கோணம் அமைக்கவும். அதாவது Mக்கும் Jக்கும், Jக்கும் Kக்கும், Kக்கும் Lக்கும், Lக்கும் Mக்குமாக நூலடிக்கச் சமசதுரமாகும். இதன் பக்க அளவுகள் 24 அஙகுலமேயாகும். இவ்வாறுக எந்த அளவிலும் சமசதுரம் செய்யலாம்

இவ்வாறன்றி மற்றொரு விதமாகவும் நாற்கோணம் அமைப்பதுண்டு. அஃதாமாறு :—

கிழக்குமேற்காக 24 அங்குல அளவுள்ள பிராசிசூத்திரமாகிய A. B யை அமைத்து, அதன் மத்தியில் E அடையாளமிட்டு, இந்த E மத்தியில்வரும்படி தெற்குவடக்காகக் கவனிப்புடன் நூலடித்து அதன் இருமுனைகளிலும் C. D. அடையாளமிட்டுச் சோமசூத்திரம் அமைக்கவும்.

E யிலிருந்து வடக்கில் சோமசூத்திரத்தில் A. E. அளவு அதாவது 12 அங்குலம் வைத்து F அடையாளமும், தெற்கில் 12 அங்குலம் வைத்து G அடையாளமும் வைக்கவும்.

இனி கிழக்குக் குறியாகிய B யிலிருந்து 12 அங்குலம் தெற்கு முகமாகவும், அவ்வாறே தெற்குக் குறியாகிய G யிலிருந்து கிழக்கு முகமாகவும் இரண்டு நூலடித்து இரண்டுங்கூடினவிடத்தில் K என்று குறியிட அக்கினி மூலையாகும். இவ்வாறே Gக்கும் Aக்கும், Aக்கும் Fக்கும், Fக்கும் Bக்குமாக நூலடித்து ஏனைய மூன்று மூலைகளையும் அமைக்கவும். இவ்வாறமைந்த நாலு மூலைகளிலும் வடகிழக்கு முதலாக முறையே J, K, I, H என்று குறியிட்டு நாற்கோணம் செய்யவும்.

இம்முறையை 2-வது படங்காட்டுகிறது




படம் II

இரண்டாவது வழியிலும் முதல் வழியே சிறந்ததாகும்.

இவ்வாறு அமைத்த சமசதுரமாகிய நாற்கோண க்ஷேத்ரமானது இருபத்து நான்கு பாகமுள்ளதாகும். அது தெரியும் பொருட்டுக் கிழக்கு மேற்காக இருபத்தைந்து நூலும், தெற்கு வடக்காக இருபத்தைந்து நூலும் அடித்தால் 24க்கு $24 = 576$ பதமாகும். இவ்விதம் பகுத்ததை மூன்றுவது படங்காட்டுகிறது.




படம் III

## 1. நாற்கோண குண்டம்.

நாற்கோண குண்டமாவது முன்போல் 24 அங்குல அளவில் சமசதுரமும் மேல் மேகலை உட்பட 24 அங்குல ஆழமும் உடையதாய் நாபி, இதயம், கர்ணிகை, மேல்மேகலை, நடுமேகலை, கீழ் மேகலை, யோனி, கண்டங்களோடு கூடியதாய் இருக்க வேண்டும்.

நாற்கோண குண்டத்தின் கீழ்அமைப்புத் தோற்றத்தை (ground plan) IV வது படம் காட்டுகிறது, அதன் எதிர்நேர் தோற்றத்தை (front elevation) V வது படமும், அதன் எதிர் இயல்பு தோற்றத்தை (perspective view) VI வது படமும், அதன் எதிர்ப்பகுதி தோற்றத்தை (sectional elevation) VII வது படமும் காட்டுகின்றன.



படம் IV

நாற்கோணகுண்டத்தின் கீழ் அமைப்புத் தோற்றம் (ground plan).

படம் V

நாற்கோணகுண்டத்தின் எதிர் நேர் தோற்றம் (elevation)

1. 2. குண்ட அளவு. அகலமும் நீளமும் தனித்தனி 24 அங்குலம்.

3. இதயகமலம், இதழ் நான்கங்குலம்.
4. கர்ணிகை நான்கங்குலம்.
5. பீஜம் ஒன்பது.
6. மேல் மேகலை.
7. நடுமேகலை.
8. கீழ்மேகலை.
9. குண்டயோனி.



படம் VI

நாற்கோணகுண்டத்தின் எதிர் இயல்புதோற்றம் (perspective view)




படம் VII

நாற்கோணகுண்டத்தின் எதிர்ப்பகுதி தோற்றம்

(sectional elevation.)

1. குண்டயோனி உயரம் ஒரு அங்குலம்.
2. மேல்மேகலை அகலமும் உயரமும் தனித்தனி 4 அங்குலம்.
3. நடுமேகலை அகலமும் உயரமும் தனித்தனி 3 அங்குலம்.
4. கீழ்மேகலை அகலமும் உயரமும் தனித்தனி 2 அங்குலம்.
5. கண்டம் ஒரு அங்குல கன திரணை.
6. பீஜத்தின் உயரம் ஆறங்குலம்.
7. கண்டத்தின் மேல் குண்ட உயரம் $11\frac{1}{2}$ அங்குலம்.
8. கண்டத்தின் கீழ் குண்ட ஆழம்—$11\frac{1}{2}$ அங்குலம்.
9. கும்பயோனி வால்.

குறிப்பு:-இந்த நாற்கோண குண்டங்களின் படங்களில் குண்ட நாபிகாட்டப்படவில்லை அது 13வது படத்தில் காட்டபட்டிருக்கிறது.

## 2. யோனிகுண்டம்.

யோனி குண்டத்துக்கு அரசிலைக்குண்டம் என்றும் பெயர்.




படம் VIII.

இந்தப்படத்தில் பிராசிசூத்திரம் E. G. என்றும், சோமசூத்திரம் F. H. என்றும், க்ஷேத்திரமூலைகள் A, B, C, D, என்றும், க்ஷேத்திரமத்தி L. என்றும் குறிக்கப்பட்டிருக்கின்றன.

இதில் யோனி குண்டம் அமைக்கும் விதமாவது நாற்கோண க்ஷேத்திரத்தை அமைத்துக்கொண்டு அதில் சோமசூத்திரத்தை அஃதாவது 24 அங்குலத்தை ஐந்து பங்காக்கி, அதில் ஒரு பங்கு மேலே தள்ளி அதாவத் F க்கு மேல் ஒருபங்கு தள்ளி I. என்று குறியிட்டு E க்கும் I க்கும், G க்கும் I க்கும் கோடுகள் வரைக.

பிறகு E க்கும் H க்கும், L க்கும் D க்கும் கோடுகளிழுத்துச் சந்திப்பு மத்தியில் J அடையாளமும், G க்கும் H க்கும் L க்கும் C க்கும் கோடுகளிழுத்துச் சந்திப்பு மத்தியில் K அடையாளமும் அமைக்கவும். இனி J யை மத்தியாகவைத்து J. D. அளவில் சுற்றுக்கருவியால் H. D. E. என்ற அரைவட்டமும், K யை மத்தியாகவைத்து K. C. அளவில் G. C. H. என்ற அரைவட்டமும் அமைக்கவும். இவ்வாறமைக்கவே யோனிகுண்டம் அமையும். இதற்குக் குண்டயோனி வேண்டுவதில்லை.

இந்த யோனி குண்டத்தின் அடிப்புறத்தை மற்றொரு வகையாகவும் செய்யலாம். அதாவது, க்ஷேத்திர அளவாகிய 24 அங்குலத்தை 4. பங்காக்கி, வந்த 6 அங்குலமாகிய ஒரு பங்கை D யிலிருந்தும் C யிலிருந்தும் மேலே தள்ளி அடையாளமிட்டு இந்த இரண்டு அடையாளங்களுக்கு நேராகக் கிழக்கு மேற்காக ஒரு நூலடித்து அதில் ஷை நாலிலொருபங்கைக்கிழக்கு முனையிலிருந்து மேற்காகவும், மேற்குமுனையிலிருந்து கிழக்காகவும் தள்ளினல் அரைவட்டங்களின் நடுமையமாகிய J. K. என்ற குறியிடம் ஏற்படும். இந்த J. K. என்பவைகளை மத்தியாக வைத்துச் சுற்றுக்கருவியால் முன்போற்சுற்றி யோனி குண்டத்தின் அடிப்புறம் அமைக்கவும்.

இந்த படத்தில் 4, 3, 2 என்று அடையாளமிட்டப் பெற்றவை மேகலைகளாகும்.




## 3. அர்த்தச் சந்திர குண்டம்.

அர்த்தச் சந்திரகுண்டமென்பது பிறைபோன்ற குண்டம், அதாவது பாதிச்சந்திரன் போன்றது.




படம் IX

இதை அமைக்கும் விதமாவது நாற்கோண க்ஷேத்திரத்தை அமைத்துக்கொண்டு அதில் சோமசூத்திரத்தை A. B. என்று அடையாளமிடவும். சோமசூத்திரத்தை ஒன்பது பங்கு செய்து A யிலிருந்து ஒரு பங்கு மேலே தள்ளி, C என்றும் B யிலிருந்து ஒரு பங்கு கீழேதள்ளி D என்றும் அடையாளமிடவும். பிறகு C யை மத்தியாக வைத்து C D அளவில் சுற்றிப்பாதி வட்டம் செய்து ஷை வட்டத்தின் இருமுனைகளிலும் E F என்று அடையாளமிடவும். E D F என்ற பாதி வட்டத்தின் E F என்ற இரண்டு முனைகளுக்கும் அதாவது E C F என்ற குறிகளுக்கு நேராக நூலடிக்க அர்த்த சந்திரன் ஆகும். அதே வடிவில் மூன்று மேகலைகளமைக்கவும்.

## 4. திரிகோண குண்டம்.

திரிகோண குண்டமென்பது முக்கோண குண்டமாகும்.




படம் X

திரிகோண குண்டம் அமைக்கும் விதமாவது :—நாற்கோண க்ஷேத்திரத்தின் நாலு மூலைகளிலும் A B C D என்ற குறிகளிட்டு க்ஷேத்திர சூத்திரத்தை ஆறு பங்கு செய்து ஒரு பங்கு A யின் மேற்கில் தள்ளி F என்றும், D யின் கிழக்கில் தள்ளி G என்றும், B C யின் மத்தியாகிய E யின் வடக்கில் தள்ளி H என்றும் அடையாளமிடவும்.

பிறகு Fக்கும் Gக்கும், Fக்கும் Hக்கும், Hக்கும் Gக்கும் நூலடிக்க முக்கோணமாகும். இதே வடிவில் மூன்று மேகலைகளமைக்கவும்.

## 5. ஷட்கோண குண்டம்.

ஷட்கோண குண்டமாவது அறுகோண குண்டமாகும்.




படம் XI

அறுகோண குண்டம் அமைக்கும் விதயாவது :—நாற்கோண க்ஷேத்திரத்தின் நான்கு கோடிகளிலும் வாயுமூலையிலிருந்து முறையே வலமாக A B C D என்றும் A B க்கு மத்தியில் H என்றும் குறியிடவும். சோம சூத்திரத்தைத் தென்கோடியில் சிறிது நீட்டிக்கொள்ளவும்.

பிராசி சூத்திர அளவாகிய 24 அங்குலமான A B அளவை H லிருந்து A D நூலில் பொருந்தும்படி வைத்து பொருந்துமிடத்தில் I என்றும், H லிருந்து B C நூலில் பொருந்தும்படி வைத்து, பொருந்துமிடத்தில் J என்றும் குறியிட்டு. H லிருந்து I க்கும், H லிருந்து J க்கும், I யிலிருந்து J க்கும் நூலடித்து முக்கோணம் அமைக்கவும், இவ்வாறமைந்த முக்கோணத்தின் மூன்று

நூல்களையும் தனித்தனி மூன்று பங்கு செய்து அவைகள் விளங்க L. M. N. O. P. K. என்று குறிகளிட்டு K. L. இரண்டுக்கும் நேராக A. D, B. C. நூல்கள் வரை நூலடித்து அதன் இருமுனைகளிலும் F. E. என்று குறியிடவும். F. E. அளவை F லிருந்து P. O. வழியாக சோமசூத்திரத்தில் தொடும்படி நூலடித்து அந்த சூத்திரசந்திப்பில் G. என்று குறியிடவும். E லிருந்து M. N. வழியாக G. வரை நூலடிக்க F. E. G. என்ற முக்கோணம் அமையும்.

இவ்வாறு எதிர் எதிராக அமைந்த இரண்டு முக்கோணங்களும் சந்திக்குமிடங்களாகிய L. M. N. O. P. K. என்ற இடங்களிலிருந்து L க்கும் M க்கும், M க்கும் N க்கும், N க்கும் O க்கும், O க்கும் P க்கும், P க்கும் K க்கும் இடையிட்ட நூல்களை அழித்துவிட சரியான அறுகோணமாகும். அதே வடிவில் மூன்று மேகலைகளை அமைக்கவும்.

## 6. அஷ்டகோண குண்டம்.

அஷ்டகோண குண்டமென்பது எண்கோணகுண்டமாகும்.




படம். XII.

எண்கோணகுண்டம் அமைக்கும் விதமாவது :—நாற்கோண க்ஷேத்திரமாகிய A B C D யில் க்ஷேத்திர நூலில் (A Bல்) பதினாறில் ஒரு பங்கு உள்ளே தள்ளி E F G H என்ற நாற்கோணம் அமைக்கவும்.

A B நூலின் நடுவில் (சோமசூத்திர வடக்கு மூலையில்) I என்று குறியிட்டு அதிலிருந்து வடக்கில் A B அளவில் எட்டில் ஒன்றை வெளியில் தள்ளி J என்று குறியிடவும். இவ்வாறே B C மத்தியிலும், C D மத்தியிலும், D A மத்தியிலும் முறையே O P, K L, M N என்ற குறிகளை உண்டாக்கி, J க்கும் P க்கும், P க்கும் L க்கும், L க்கும் N க்கும், N க்கும் J க்கும் நூலடித்து மற்றொரு நாற்கோணம் செய்து, இந்த நாற்கோணமும் உள் நாற்கோணமும் சந்திக்கிற இடங்களில் R S T U V W X Q என்று அடையாளமிட்டு, RS, ST, TU, UV, VW, WX, XQ, எனும் இவைகளுக்கிடையில் உள்ள இரேகைகளை அழித்துவிட சரியான எண்கோணமாகும். குண்ட வடிவில் மேகலைகளை அமைக்கவும்.

## 7. விருத்தகுண்டம்.

விருத்தகுண்டமாவது வட்டவடிவான குண்டம்.




படம் XIII

விருத்தகுண்டம் அமைக்கும் விதமாவது :—நாற்கோண க்ஷேத்திரத்தில் சோமசூத்திரத்தின் இரண்டு முனைகளிலும் A B என்று குறியிட்டு, அதன் மத்தியில் C என்று குறித்து, க்ஷேத்திர கோணம் ஒன்றில் D என்று குறித்து க்ஷேத்திரமத்தியாகிய C க்கும D க்கும ஒரு நூலடிக்கவும்.

கண்டசூத்திரமாகிய (சோமசூத்திரம்) A B யின் பாதி யாகிய A C யை எட்டுப்பங்காக்கி ஒருபங்கை D C நூலில் D யிலிருந்து தள்ளி E என்று குறியிடவும்.

C யை மத்தியாகவைத்து C E அளவில் சுற்றுக் கருவியால் சுற்ற சரியானவிருத்த குண்டமாகும். குண்டவடிவில் மேகலை களைச் செய்யவும்.

## 8. பத்மகுண்டம்.

பத்மகுண்டமாவது தாமரை மலர்போன்ற குண்டமாகும்.




படம் XIV

பத்மகுண்டம் அமைக்கும் விதமாவது :—நாற்கோணக்ஷேத்திரத்தில் முன்போல் C E அளவில் C யை மத்தியாக வைத்து வட்டம் செய்து, வட்டத்தின் வெளியில் மூன்று மேகலைகளின் அகல அளவாகிய ஒன்பதங்குலத்தின் பாதியான நாலரை அங்குலத்தில் கர்ணிகை வட்டமும், அதன் வெளியிலுள்ள நாலரை அங்குலத்தில் எட்டுத் தாமரை யிதழ்களும் செய்யவும்.

பத்மகுண்டதுக்கு மத்தியில் இருதயபதுமம் வேண்டுவதில்லை.

இவ்வாறு குண்டங்களினிலக்கணம் ஒருவாறு கூறப்பட்டது.

இதில் சேர்க்கப்பட்டிருக்கும் அறுபத்துநான்கு பத மண்டூகவாஸ்து படம், வேதிகை படங்கள், கும்ப படங்கள், தீக்ஷாயாகசாலாபடம் ஆகிய இவைகளின் விபரங்களையும் மற்றவைகளையும் இனி அச்சிடப்படும் "சித்தாந்தப் படவிளக்கம்" என்னும் புத்தகத்தின் இரண்டாம் பதிப்பிற் காணலாம்.



படம் XV

அறுபத்து நான்கு பதமண்டூக வாஸ்து.

படம் XVII

வேதிகையின் எதிர்நேர் தோற்றம்





படம் XVI

வேதிகையின் கீழ் அமைப்புத் தோற்றம்



படம் XVIII



படம் XIX

கும்பத்தின் எதிர்ப்பகுதித் தோற்றம்.

1. கலசம்.
2. தண்ணீர் (கும்போதகம்).
3. நவரத்தினம்.
4. சொர்ணபுஷ்பம்.
5. அந்தகூர்ச்சம்.
6. தேங்காய்.
7. மாவிலை.
8. லம்பகூர்ச்சம்.



படம் XX

கும்பத்தின் எதிர் நேர் தோற்றம்.

1. சப்த தானியம்.
2. கலசம் அல்லது கும்பம்.
3. கும்பசூத்திரம்(கும்பத்தின்மேல்) சுற்றிய நூல்.
4. ஈசானாதி முகசூத்திரம். இது கிழக்கு முதல் நான்கு திக்கிற்கும் 4ம் வடக்குக்கும் கிழக்குக்கும் மத்தியில் 1ம் ஆக ஐந்து.
5. மாவிலை.
6. தேங்காய்.
7. லம்பகூர்ச்சம்.
8. 9. பரிவட்டம்.

படம் XXI.

இரவிசூத்திர தீக்ஷாயாகசாலை.



குண்டவிதி

முற்றும்.



உ
சிவமயம்.

பஞ்சாக்ஷரபுரம்

உயர்திரு

# வாலையானந்த சுவாமிகளால்

## வெளியிடப் பெற்றவை.

---

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| சித்தாந்தப்படமும், சித்தாந்தப்பட விளக்கமும் | 4 | 0 | 0 |
| சிவஞானபோதச் சுருக்கம் காலிக்கோ | 0 | 12 | 0 |
| ஷை ராப்பர் | 0 | 10 | 0 |
| சைவாநுட்டான விதி (இதில் அநுட்டான முத்திரா லட்சணமும், முத்திராலட்சணமும், முத்திரைகளின் படங்களும் சேர்ந்திருக்கின்றன.) | 1 | 8 | 0 |
| தத்துவ விளக்கச் சுருக்கம் | 0 | 3 | 0 |
| துகளறுபோதக் கட்டளை | 0 | 2 | 6 |
| சிவனடியார் திருக்கூட்டம் | 0 | 3 | 0 |
| சிவஞானபோதச் சூரணிக்கொத்து | 0 | 0 | 6 |
| பிராசாதபடம் | 1 | 0 | 0 |
| குண்டவிதி | 1 | 4 | 0 |
| சித்தாந்தப்பட விளக்க பாலபோதம் | | | |

(வி. பி. செலவு தனி)

---

கிடைக்குமிடங்கள் :—

வாலையானந்த சுவாமிகள்,
சித்தாந்த நிலையம்,
கொரடாச்சேரி P. O.,
தஞ்சை ஜில்லா.

கரந்தைத் தமிழ்ச் சங்கம்,
கருந்தட்டாங்குடி P. O.,
தஞ்சை.

